நேசம்.

"அன்புக்குமுண்டோ அடைக்குந்தாழ்!"

உடலிற் சிறியாரும் பெரியாருமாகிய குழந்தைகளே, இம்முறை நான் உங்களுடன் 'நேசம்' என்பதைப்பற்றிப் பேசப்போகிறேன். அதை நீங்களெல்லோரும் சிரத்தா பக்தியுடன் அவதானமாகக் கேட்கவேண்டும்:—

"நேசமென்பது பாசங்கடந்தது." பாசமென்பது கட்டுங்கயிறுபோல் ஆசைக்கயிற்றினால் அறிவினைக்கட்டும் தன்மையுடையது. ஆசையோ மாசுபடிந்த மனத்தினின்றெழுமோர் ஆவல். மனத்தின் சுபாவம் நினைப்பும் மறப்புமாய் ஒன்று விட்டொன்றைப்பற்றின வண்ணமாயிருத்தலாம். இதை "மற்றொன்று மற்றொன்று மனோபவம்" என்னும் மூதுரையால் அறியலாம். மனது ஒன்றையே பற்றி நின்றால் தாதத்மியசக்தி வன்மையால் அறிவானும் அறிபொருளும் ஒன்றாக இடையிலுள்ள மனம் (அறிகருவி) அறிவுமயமாகிவிடும். அது எப்படியென்றால் மண்ணை உலையிலிட்டு ஒரே சூடாக உருக்க உருக்க அது கன்மஷமிழந்து பளிங்காகுந்தன்மைபோல் என்று சொல்லுவர். இவ்வுலகிலே "பணத்துக்கெட்டாத மணம்" என்று சொல்வதில் "உண்மை நேசம்" ஒன்றாம். பணம் என்பது பொன் வெள்ளி நாணயத்துக்குமட்டும் பேராகக் கொள்ளக்கூடாது. பதார்த்தம் அதுவே யானுலும் கொள்வினை கொடுப்பனைக்கு அது ஒரு சாதனமாக விருத்தலால், கொடுத்து வாங்கும் வியாபாரத்துக்கே அது அறிகுறிப்பேராய் நிற்கும். அறிகுறிப் பெயராயிருப்பதின் பொருளுக்கு லக்ஷியார்த்தம் என்றுபேர். லக்ஷியம் என்றாலும் "அறிகுறி" யென்றாலும் ஒன்றே. லக்ஷியத்துக்கழகு லக்ஷணம். தமிழில் இவற்றை "இலக்கிய இலக்கணம்" என்பர்.

"இலக்கியம் கண்டதற்கு இலக்கணம் இயப்புவர் புலவனுர் என்பர்."

ஒரு பொருளை நேர்நேராய் உள்ளும் புறமும் ஒக்கப்பார்ப்பது இலக்கியம். இது அறிவின் தொழில் இதைச்செய்யும் ஓர் சக்தியுண்டு. அதை சித்சக்தி யென்பர். சித் என்றால் அறிவு. இந்த அறிவுக்கு அறியும்சக்தி தானுயுண்டு. அது எப்படியென்றால் சூரியனுக்கு வெளிச்சம் உண்டுபோல் இயற்கையாயுடையது.

சூரிய வெளிச்சம் இருளையகற்றிப் பொருளை விளக்குவதுபோல், இந்த சித்சக்தி அறியாமையை (அஜ்ஞான இருளை)ப்போக்கி அறிவின் பிரகாசத்தால் மனத்தெளிவையும், மனத்தெளிவின் மூலமாக உண்மை யுணர்ச்சியையும் உண்டு பண்ணுகிறது. இப்படியுள்ளத்துணரும் உண்மை யுணர்ச்சியை பஹிர்முகதரிசனமாக வெளியிற் கண்டால் தன்னையறியாமல் தன்மனம் அந்த உண்மை லக்ஷியப்பொருளைப்பற்றி அதில் ஒன்றுபட்டுச்சேரும். இப்படிச்சேரும்போது மனம் லயித்துப்போகும். அப்படி யென்றால் ஒய்ந்து உட்கார்ந்து போகும். ஒய்ந்து போகிறதென்றால் நினைப்பு மறப்புத்தொழில் செய்யும் வேலை ஒய்ந்து என்று அர்த்தம். உட்கார்ந்து போகிறதென்றால் நினைப்பும் மறப்பு மற்ற விடத்துள்ள நிஷ்களரூப ஏகவெளியில் 'அலையற்ற நீர்போல்' அமர்ந்து விடுகிறது. இதற்கு "ஒழிவிலொடுக்கம்" என்று சொல்லுவர். இந்த அவஸ்தையில் அது அன்பொன்றேயாகி அந்த அன்பின் விலாஸமாகிய "அருள்வெளி"யில் "ஊசியைக் காந்த மிழுக்கின்றவாறுள்ள ஓர் சக்திக்குட்பட்டதாயிருக்கிறது. அந்த அருள்வெளியை மேற்றிசைமனோதத்துவசாஸ்திரக்ஞர் "Field of consciousness" என்று சொல்கிறார்கள். இந்த வேளிக்கு எதையும் தன்மயமாக்கும் சக்தியுண்டாதலால், இதை "ஸ்பரிசவேதி" யென்று தாந்திரீகர்கள் சொல்லுவர். இதையே இங்கிலீஷில் "Philosopher's Stone" என்று சொல்கிறதுண்டு. "மணி மந்திர, ஔஷதம்" என்கிற மூன்று உபாயங்களில் இந்த அருள் வெளியில் அருளொளிபட்டு மனவிருள் நீங்கிய ஸ்படிகரூப சுத்தமனமே "சிந்தாமணி" யென்று சொல்வது. இதையே சுருக்கமாய் "மணி" யென்று சொல்வதுமுண்டு. இந்த சிந்தாமணி ஸத்யா ஸத்ய வஸ்து விவேகம் உதயமாகி அவ்

விவேகம் முதிர்ந்த மனஸில் தானே (உன்மனவில்) உண்டாகிறபடியால் இதற்கு விவேகசிந்தாமணி யென்று சிறப்புப் பெயர் உண்டாயிற்று. இந்த விவேகசிந்தாமணியும் அந்த அருள் வெளியிலிருந்து தானே நடத்தப்படுகிறது. "ஏடலாத வட்டிலுள்ள எழுதாக்ஷரம் * வாசிக்கும் சக்தி" பெறலே படிப்பின் பயனும் முடிவு நோக்கமுமாம். அஃது பெறற்படாவிடத்து படித்தபடிப்புப் பயனிலதாகும். அதற்குத் தான் "ஏட்டுப்படிப்பு" என்றும் "சேற்றுப் படிப்பு" "வயிற்றுப்படிப்பு" என்றும் பல விதமான பேர் வழங்குகிறது. பாசங் கடந்த நேசம் உண்மைப்படிப்புப் படித்தவர்களிடத்தே தோன்றும். உண்மைப்படிப்பாவது மனம் அடங்கப்பெறுவதாம். "அலையுமனத்தையடக்குமவனே" எல்லா வித்தைக்கும் பாத்திரனும் வித்யாதேவதைகளால் சேவிக்கப்பெறுவன். "அலாடின்ஸ் விளக்கு" (Aladdin's Lamp) என்பது அஹவிளக்கையே குறிக்கும். இது மனமடங்கப்பெற்றார் வசமான தாயினும், எல்லோரிடத்தும் அகஸ்மாத்தாகத் தோன்றும். அப்படித்தோன்றும்பொழுது தன்னையறியாது உள்ளம் அன்புள்ள விடத்தில் பற்றும். அந்த அன்புக்குறைவிடமாயிருக்கிறவரையே "எனதுள்ளம் கவர் கள்ளன்" என்று மேலோர் துதித்திருக்கிறார்கள். சமலாம்பாள் சரித்திரத்தில் "கல்யாணி" தன் அன்புடை நேசனை "மனந்திருடிச்சீமா" என்று குறிக்கும்பொழுது இந்த உண்மையையே உள்ளன்பு காரணமாகத் தானுகவெடுத்துரைப்பாளாகிறாள். அவள் சீனுவுக்கெழுதும் கடிதத்தை நன்றாகப் படித்துப்பார்த்தால் "தத்துவஞானம்" என்று வாச்சாமகோசரமாய்ச் சொல்லும் உண்மைகளெல்லாம் உள்ளன்புடையாரிடத்தில் எவ்வளவு சாமானியமாய்த் தோன்றுகிறதென்பது உள்ளங்கை நெல்லிக்கனிபோல் தானே விளங்கும்.

உள்ளன்புண்டான விடத்தில் உண்மை நேசம் தானே தோன்றும். அது 'காசுபணம்' என்கிற வியாபாரக்கட்டுக்கு அடங்காதது. "ஆசாபாசம்" என்கிற மனோவிகாரங்களுக்குமப்பாற்பட்டது. அது "இச்சாசக்தி" வசப்பட்டது. மண்கொட்டினுல் வெட்டப்படாதது. குந்தாலியினுல் பிளக்கப்பட மாட்டாதது. கட்டப்பாரையினுல்தகர்க்கப்படாதது. "கொட்டுக்குந்தாலிக்கும் பாரைக்கும் முன்நிற்கும் இஷ்டம் வலிதென்பர்." அந்த இஷ்டத்தைப் பொறுத்தது உண்மை நேசம். அந்த இஷ்டம் தானும் ஈசன் அருள் தானேயாகும். உலகத்தில் 'உண்மை நேசம்' இருந்தால் சண்டை பூசல் இராது. மதமாச்சரியங்களின் உபத்திரவங்கள் அற்றுப்போம். 'உண்மை நேசம்' அறிவாகிய இலக்ஷியத்துக்கு அழகான இலக்ஷணமாகும். அந்த நேசமுள்ள விடத்துப் பாசம் நில்லாது.

"நான்காசுப ணம்வாங்கேன்
காணிக்கையு மேற்றுக்கொள்ளேன்
"அன்பான வார்த்தைகளே
இன்பந்தரும் வெற்றிலைகாண்
மன்மதனைச் சுட்டெரித்த
சாம்பலே வாசனைகாண்
அகங்காரமம காரமதை
யறைத்துச்சந்தனப் பூச்சிடுவேன்;
புத்தியெனும் பூவைக்கொய்து
பூமாலை சூட்டிடுவேன்;
ஊனஉடல் அழித்துனக்குச்
சாந்துப்பொட்டு இட்டிடுவேன்;
உன்னறிவதனைப் புகையில்காட்டியுன்
கண்ணுக்குமை யிட்டிடுவேன்;
உன்பஞ்சேந்திரியங் களையழித்துப்
பாதக்குறடு தந்திடுவேன்;
உன்னுயிரைமட்டும் அடைக்கலமா
என்னிடத்து வைத்திருப்பேன்.
இத்தனைகோ லங்களும்நான்
கோர்வையாகச் செய்துவிட்டேன்"—

என்று என் ஆனந்தத்தாயார் சொல்லியபடி 'உண்மை நேசம்' உள்ள விடத்து இத்தனை கோலங்களும் அது செய்துவிடும். நேற்று நான் உண்மை நேசம் வைத்த அன்பர் ஒருவர் இரண்டு மாதம் வெளியே போவதாகச்

* 'Book of Nature'.

சொல்லி விடைகேட்டுக் கொண்டு போக வந்தார். அவருக்கு விடைகொடுத்தனுப்ப மனந்தாளவில்லை. அப்பொழுது உள்ளத்து நிகழ்ந்ததை உற்றுப்பார்க்கையில் உண்மை நேசத்தின் மஹிமையின்னதென்றுகண்டேன். கண்டதைக் கண்டபடி விவேகசிந்தாமணியை வாசிக்கும் சிறுவர் சிறுமிகளுக்குபயோகமாக வென்று இங்கு எழுதலானேன். இதையே லண்டன் டைம்ஸ் பத்திரிகையிலும் ஒருவர் விளங்கக்கூறியிருக்கிறார். அதில் முக்கிய பாகத்தை இதன் முகப்பில் அச்சிட்டிருக்கிறது. அதைப்பார்த்தாலும் 'உண்மை நேசம்' உண்டான விடத்தில் வேற்றுமை யெல்லாம் விழுந்துபோமென்பது ஸ்பஷ்டமாய் விளங்கும்.

இப்படிக்கு,
உங்கள் அன்புள்ள,
குட்டியண்ணு.

---

*The Madras Social Service League.*—The Secretary of the Leage, writing to the Editor of the "Vivekachintamani," says :—"In the meeting held recently under the presidency of the Hon'ble Mr. T. V. Seshagiri Iyer, a resolution was passed conveying to you the thanks of the League for the kind gift of the periodicals you were pleased to make to the League last week. I have been directed to communicate to you the same and to intimate to you the readiness of the League to avail itself of your generous offer to place a portion of your Library at the service of the League."—*The Madras Mail, 8th September*, 1914.

"*The Vivekachintamani.*"-"The August number of this popular Tamil monthly, now in its 22nd year of publication, opens with anexcellent article on child-education. It treats of "the training of the senses and powers of observation." There are a number of other articles, all written in easy style, to suit the understanding of the child-mind. The descriptive sketch on "The general conflagration of European War" and "Blindman's buff among nations" in "Tit-bits for Children," are to the point. We are glad to note that the Government have, on the recommendation of the Director of Public Instruction, recognised the good work the journal has been doing in the cause of child-education and the improvement of vernacular studies, and declared it as suitable for use in all Elementary and Lower Secondary schools, including those under the management of Local Boards and Municipalities. The supply of the journal to all the Government schools and to educational officers in charge of Elementary and Secondary education has been ordered by Government. The persevering and persistent labours of the Editor, who has been working in the field of vernacular studies for more than a quarter of a century, are commendable." — *The Madras Mail, 8th September*, 1914.

## BIOGRAPHICAL SKETCHES.

### I. MISS. FLORENCE NIGHTINGAME.

(ILLUSTRATED.)

" England's Empire over the raging seas
She owes to Nelson's voice of 'Duty to be done !'
England's Empire over the Mind that feels
That Lady with the Lamp founded on her 'Duty Done.'

—*From the Vivekachintamani Children's Record.*

## சரித்திர மஞ்சரி.

### I. பிளாரேன்ஸ் நைத்திங்கேல் என்னும் பரோபகாரியின் சரித்திரம்.

பிளாரேன்ஸ் நைத்திங்கேல் ஒரு ஆங்கிலேய பிரபுவின் குமாரத்தி. இவள் இத்தாலியா தேசத்தில் 1820-ம் வருஷத்தில் பிளாரென்ஸ் என்னும் நகரத்தில் பிறந்தாள். இதனாலேயே இவளுக்கு பிளாரென்ஸ் என்னும் பெயர் கிடைத்தது. இங்கிலாந்து சீமையில் கூட அக்காலத்தில் ஸ்திரீகளுக்கு உயர்ந்த படிப்புச் சொல்லி வைப்பது சரியல்லவென்று என்ணினவர்கள் அநேகர். பிளாரென்ஸின் தகப்பனார் மாத்திரம் தன்னுடைய பெண்ணுக்கு புருஷர்கள் சர்வகலாசாலைகளில் படிக்கும் படிப்பெல்லாம் தானே சொல்லிவைத்தார். இவ்வாறு இவள் கற்றவித்தைகள் பலவும் பின்னர் இவளுக்கு வெகு பிரயோஜனமாகவே யிருந்தன.

இளம்பிராயம் முதற்கொண்டே பிளாரென்சுக்கு ஜீவப்பிராணிகளின்பேரில் அத்தியந்தப் பிரீதி. மனிதனாகட்டும், மாடாகட்டும், ஈயாகட்டும் எதுவும் வருந்த இவள் சகியாள். தன்னால் இயன்றமட்டும் அதற்கு உதவிசெய்யாது அரைக்கணமும் நில்லாள். இவ்வாறே ஒருநாள் சாயங்காலம் தன்னுடைய தகப்பனாருக்கு வெகு நண்பரும், ஜனங்களுக்கு வெகு உபகாரியுமான ஓர் பாதிரியும் தானுமாக வழக்கம்போல் சவாரி போய்க்கொண்டிருக்கையில் ஆட்டிடையன் ஒருவன் தன் தூரட்டியை கீழே ஊன்றிக்கொண்டு அதன்மேல் சாய்த்த தலையனாய் வெகு விசாரத்துடன் நின்றுக்கொண்டிருந்ததையும், அவன் பக்கத்தில் ஆடுகள்

அங்குமிங்குமாய்ச் சிதைந்து ஓடிக்கொண்டிருந்ததையும் கண்டு என்ன சமாசாரமென்று இவர்கள் இடையனை விசாரிக்க, அவன் தன்னிடத்தில் ஒரு நாய் இருந்ததாகவும், அது எப்பொழுதும் தன்னுடனேயிருந்து ஆடுகள் சிதறி ஓடாமல் வெகு விசுவாசத்துடன் காத்துக் கொண்டிருந்ததாகவும், தனக்கு பெண்டு பிள்ளைகள் ஒன்றும் இல்லாமையினால் அதுவே பிள்ளையென்று தான் அதை அருமையுடன் வளர்த்துவந்ததாகவும், அதை யாரோ துஷ்



Miss Nightingale.

டப்பையன்கள் கல்லை விட்டெறிந்து காலை முறித்துவிட்டதாகவும், அதற்குமேல் அது தனக்கு பிரயோஜனப் படாதாகையால் அதை தான் வினை வைத்துச்சோறுபோட முடியாமையின் தூக்கிடவேண்டி வந்துவிட்டதாகவும், கண்களில் நீர்ததும்பச் சொன்னான். பிளாரென்ஸும், பாதிரியும் இடையனுடன் மேலொன்றும் பேசாமல் கொஞ்சதூரம் போனார்கள். போனதும் பாதிரி "இடையன் நாயைப்போய்ப் பார்ப்போமா? அதன் கால் முறிந்திருக்குமென்று தோன்றவில்லை. ஒரு பெரிய நாயின் காலை முறிக்க எவ்வளவுபெரிய கல்லைக் கொண்டுபோடவேண்டும்" என்றார். பிளாரென்ஸுக்குக் கேட்கவேண்டுமா: எப்பொழுதும் யாருக்கு என்ன உபகாரம் செய்வோமென்று இருப்பவளாயிற்றே! சரி! யென்று இருவரும் நேரே இடையன் வீட்டுக்குச்சென்று நாயின் காலைப்பார்த்ததில் கால் முறிந்தில்லை. கல் அடித்ததில் கொஞ்சம் காயப்பட்டு கால் வீங்கியிருந்தது. பாதிரி இதெல்லாம் கொஞ்ச மறிந்தவராகையால் வெந்நீரைவைத்து வேதுபோட்டால் வீக்கம் வற்றுமென்று சொன்னதுதான் தாமதம். பிளாரென்ஸ் உடனே ஒரு அடுப்பு மூட்டி

வெந்நீர் வைத்து ஒற்றடம் கொடுக்க ஆரம்பித்தாள். நாய்க்கு வலி கொஞ்சம் மட்டுப்பட்டது. அவர்கள் வீட்டுக்குத் திரும்பும் பொழுது வழியில் நாயைத் தூக்குவதற்கென்று சுருக்கிட்ட கயிறும் கையுமாய் வந்து கொண்டிருந்த இடையனைக்கண்டு நாயைக் கொல்லவேண்டாமென்று சொல்லிவிட்டு வீடு போய்ச் சேர்ந்தார்கள். பிளாரென்ஸ் நைத்திங்கேல் மறுநாள் காலமே இதுவே நினைவாய் எழுந்து இடையன் வீட்டுக்கு வந்து மறுபடியும் ஒரு தடவை ஒற்றடம் போட்டுவிட்டுப் போனாள். நாயும் காயமாறி நடமாடத்தலைப்பட்டது. இப்படி இவளுக்கு பாலியத்திலேயே உண்டாகிய ஜீவகாருண்ணியம் வயது ஆக ஆக வளர்ந்துகொண்டே வந்தது. குழந்தைப் பருவம் கழிந்து கல்யாணம் செய்து கொள்வதற்கேற்ற யௌவனமும் வந்தது. நல்ல குலத்தில் பிறந்து, தக்க ஐசுவரியம் படைத்து, விசேஷக் கல்வியும் நிறைந்து விளங்கிய இவளுக்கு கல்யாணம் செய்துகொள்ள வேண்டுமென்றால் தக்க புருஷர்கள் வாய்த்திருக்கமாட்டார்களா? நான், நீ யென்று குதி போட்டுக்கொண்டு வந்திருப்பார்களே? ஆனால் பிளாரென்ஸுக்கு அப்படி யொன்றிலும் கருத்தில்லை; தன் வயதுப்பெண்கள் மற்றவர்களைப் போல ஆட்டம், பாட்டு, ஆடை, ஆபரணம், இவைகளில் இவளுக்கு மனம் போகவில்லை. யாருக்கு என்ன உதவிசெய்யலாம் எவர்க்கு எது பிரீதி என்று எப்போதும் யோசனையே தவிர தன்னைப்பற்றிய ஞாபகம் அவளுக்குக் கொஞ்சமும் கிடையாது.

இவ்வாறு பரோபகாரம் செய்வதே தான் ஜன்மம் எடுத்ததின் பிரயோஜனமென்று ஒரே உறுதியாய் நம்பி, எந்த வழியில் ஏற்பட்டால் தன் கருத்து முற்றிலும் நிறைவேறு மென்று ஆலோசிக்கையில் அக்காலத்தில் ஆஸ்பத்திரியில் நோயாளிகளுக்குத் தக்க போஷணையில்லாததால் வெகு உயிர்ச்சேதம் நேரிடுவதைக் கண்டு அதை நிவர்த்திப்பது தான் தனக்கு அமைந்துள்ள தொழிலென்று கண்டுகொண்டு அதையே அநுசரிக்கும்பொருட்டு தேச தேசங்களுக்குப்போய் ஆங்காங்குள்ள பற்பல ஆஸ்பத்திரிகளிலும் வியாதியஸ்தர்களை பராமரிக்கும் விதம் என்னென்னவென்று தீர விசாரித்து வந்தாள். நோயாளிகளைப் பாதுகாக்கவேண்டுமானால் நோயின் விபரமென்ன? அதற்குச் செய்யவேண்டிய சிகிச்சைகள் என்னவென்று அறிந்திருப்பது அவசியமாகையால் அதையும் அறிந்துவந்தாள்.

இவள் இவ்வாறு ஆஸ்பத்திரியில் வியாதியஸ்தர்களைப் போஷிக்கும் தொழிலைச் சீர்பண்ண ஏற்படுவதற்கு முன் அத்தொழில் செய்துகொண்டு வந்தவர்கள் யாவர்களோ எனின், அவர்கள் ஈனகுலத்திற் பிறந்து இழிதொழிலில் பிரவேசித்து துன்மார்க்கத்தில் அழுந்திப் பின்பு போக்கற்று இத்தொழிலையோர் ஜீவனாதாரமாகப் பற்றிவந்தவர்களாயிருந்தார்கள். அவர்கள் விகாரமான முகத்தையும், அவலட்சணமான ரூபத்தையும், அசுத்தமான துணிகளையும் பார்க்க ஒரு வியாதியுமில்லாமல் பசியுட னிருப்பவர்களுக்கே அன்னத்துவேஷம் உண்டாகுமானால் ஏற்கனவே அரோஜிகம் பிடுங்கித்தின்னும் வியாதியஸ்தர்களுக்கு இவர்கள் கையால் மருந்து சாப்பிட்டு பத்தியம் வாங்கிக்கொள்ளவேண்டுமானால் கேட்கவும் வேண்டுமா? வியாதியும் சௌக்கியமாய் விடும்! வியாதியஸ்தர்களும் உயிருடன் எழுந்துவிடுவார்கள்! இப்படியிருந்தால் ஆஸ்பத்திரிகளில் ஜனங்கள் ஏராளமாய் மாண்டுபோகக் கேட்பானேன்! இப்படிப்பட்ட க்ஷாமதேவதைகளைத் தவிர்த்து துய்ய வெள்ளையான உடையும், மெதுவான நடையும், அன்பும், ஆதரவும் நிறைந்த தாதிகள் இப்பொழுது எந்த ஆஸ்பத்திரிகளிலும் காணப்படுவார்களானால் அது இம்மாது சிரோமணியினால் சித்தித்த பாக்கியமே. இக்காலத்தில் நமது மாக்ஷிமை தங்கிய முதல் சக்கரவர்த்தினி 'விக்டோரியா' பெருமாட்டி முதற்கொண்டு

நமது தற்காலத்து கவர்னர்ஜெனரல் கனம் பொருந்திய லார்டு ஹார்டிஞ்சு பிரபு அவர்கள் பத்தினியார் தாமும், இன்னுமற்றவர்களும், மிகவும் எளியவர்கள் வீடெல்லாம் சென்று அங்கே வியாதியா யுள்ளவர்களுக்கு மருந்தோ, தீனியோ, கொண்டுபோய்க் கொடுப்பது தமக்கு இழிந்ததென்று எண்ணுமல் கஷ்டப் படுபவர்களைத் தேற்ற வேண்டியது தங்கள் கடமையென்று எண்ணுவது முதலில் பிளா ரென்ஸ் நைத்திங்கேல் காட்டிய உதாரணத் தினுல் தான். தற்காலம் நடக்கும் சண்டை யில் காயம்பட்டவர்களுக்கு உதவி செய்ய வென்று இந்தியாவிலுள்ள கவர்னர்கள் மனைவிமாரெல்லாம் இவ்வழியில் முயன்று வரு கிருர்கள்.

பிளாரென்ஸுக்கு இவ்வாருகப் பட்டுக்கொண்டு வந்த பிரயாசையின் பலன் கைக்கு மெய் யாகக் கூடிய சீக்கிரத்தில் கிட்டியது. 1854-வருஷத்தில் இங்கிலாந்து தேசத்தவர்க்கும் ருஷியாதேசத்தவர்க்கும் கிரிமியாவில் போர் உண்டாகியது. யுத்தகளத்துக்கு சமீபத்தில் ஆஸ்பத்திரிகள் கிடையா. யுத்தகளத்தில் காயப்பட்டவர்களை (Black Sea) கருங்கடலைத்தாண்டி 'ஸ்குத்தாரி' என்னும் இடத்துக் குக் கொண்டுபோக வேண்டியிருந்தது. அங் கேதான் என்ன, வேண்டியபடி மருந்தா, துணியா, உண்டியா ஒன்றும் கிடையாது. குற்றுயிராய்க் கொண்டுவந்து போடப்பட்ட வர்கள் போட்டவிடத்திலே போடப்பட்டுக் கிடந்தார்கள். ஆஸ்பத்திரியில் சுத்தமென் பதே கிடையாது. துர்க்கந்தமோ குடலைப் பிடுங்கியது; நல்ல காற்றேட்டத்துக்காவது இடமுண்டோ வென்ருல் அதுவும் இல்லை. இவ்வாருக ஆஸ்பத்திரிகள் சீர்குலைந்து கிடந் ததினுல் போர்க்களத்தில் மடிபவர்களைக்காட் டிலும் இங்கே பார்க்கச் சகிக்காத ஹிம்சைப் பட்டு சாகும் ஜனங்கள் தொகை ஜாஸ்தியாக இருந்தது. ஏன் என்று கேட்க ஒரு நாதியு மில்லாமல் காயம்பட்ட யுத்தவீரர்களும் மற்ற வர்களும் மடிந்துபோகிருர்களென்று இங்கி லாந்தில் ஜனங்களுக்குத் தெரிந்தவுடன் எல் லாருக்கும் தாம்தாம் போய் உதவிசெய்ய வேண்டுமென்று தோன்றிற்று. போய்ச்செ ய்வதென்னவென்று ஒருவர்க்காவது தோன்ற வில்லை யாதலால் என்ன செய்வதென்று விழி த்து வேதனைப் பட்டுக்கொண்டிருந்தார்கள். இவ்வளவு குழப்பத்தில் மனம் கலங்காமலிருந் தவள் பிளாரென்ஸ் நைத்திங்கேல் ஒருவளே! ஜனங்கள் கிடந்து பரிதபிக்கிறதைக்கேட்டு அந்த அம்மாள் மனமுருகித் தானே 'கிரிமியா' வுக்குப் புறப்பட்டுப்போகச் சித்தம் என்று அப்பொழுது யுத்த இலாகா மந்திரியான மிஸ் டர் ஸிட்னி ஹெர்பர்ட் துரையவர்களுக்கு எழுதினுர். அவருக்கும் இந்த அம்மாள் ஒரு வள் தான் இந்த சமயத்தில் உதவிசெய்யக் கூடியவள் என்று தோன்றியதால் இவள் ஒத் தாசையைக் கோரி ஒரு கடிதமெழுதினுர். இருவரும் பிரத்தியேகமாய் ஏககாலத்தில் எழுதிய கடிதம் வழியில், சந்தித்து அவரவரி டம் போய்ச்சேர இருவரும் சரியென்று உட னே அதற்காகவேண்டிய ஆயத்தம் செய்தார் கள். மிஸ்டர் ஸிட்னி ஹெர்பர்ட் துரை, மிஸ் நைத்திங்கேல் தானே தனக்கு உதவிபுரியத் தக்கவர்களைத் தெரிந்தெடுத்து தன்னேடு அழைத்துக்கொண்டு போய் போர்முகத்தில் காயப்பட்டவர்களுக்கு வேண்டிய உதவிபுரிய ஏற்பாடு செய்யவேண்டுமென்று கேட்டுக் கொண்டார். அப்பொழுது சீக்கு மனுஷர் களைப் போஷிக்கும் தாதித்தொழில் நாம் முன் சொல்லியபடி ஈனப்பட்டிருந்ததால் கண்ணிய முள்ள குலமாதர்கள் அத்தொழிலை வெறுத் திருந்தார்கள். ஆனல் இப்பொழுது ஜனங் களுக்குள் உண்டாயிருந்த உற்சாகத்தில் மிஸ் நைத்திங்கேல் ஒண்டியாக யுத்தம் நடக்கு மிடத்துக்குச் சென்று யுத்த முகத்தில் காயப் பட்டு வருந்தும் போர்வீரர்களுக்கு உதவி செய்யப் போகிருளென்ற செய்தி நாடெங்கும் பரவியதும் அனேகம் குலமாதர்கள் யுத்தத் திற்குப் போயிருக்கும் தங்கள் புத்திர மித்திரர்

கள், சகோதரர்கள் முதலானவர்களை நினைத்துப் பரிதபித்துக் கொண்டிருந்தபடியால் 'நான் வருகிறேன், நான் வருகிறேன்' என்று முன் வந்தார்கள். அவர்களில் கூடியமட்டும் தக்கவர்களும் தன்னுடைய சொல்லைக் கேட்கக்கூடியவர்களுமாக 34 பேர்களைத் தன்னோடு தாதிகளாக வரக் கூட்டிக்கொண்டு அவள் சிறு பிராயமுதலறிந்த பாதிரியொருவரைத் தவிர வேறு புருஷத்துணையின்றி மிஸ் பிளாரென்ஸ் நைத்திங்கேல் 1854-ஆம் அக்டோபர்மீ 30உ கிரிமியாவுக்குப் புறப்பட்டாள். புறப்பட்டு விட்டாளென்றபோதே ஜனங்களுக்கு வெகு உற்சாகம் உண்டாயிற்று. எங்கும் அவள் பெயர் கொண்டாடப்பட்டது. கிரிமியாவிலிருந்து வந்த ஒவ்வொரு தபாலும் அவருடைய சாமர்த்தியத்தை மேன்மேலும் கொண்டாடியே வந்தது. அவளுக்கிருந்த சாமர்த்தியம், காருண்ணியம், தோரணி இவைகள் அணுவளவேனும் குறைந்திருக்குமானால் அந்த அம்மாள் எடுத்த முயற்சி வீணாகவே முடிந்திருக்கும்.

இவர்கள் ஸ்குத்தாரியில் போய் இறங்குவதற்கு முந்தினநாள் தான் பாலக்லாவா (Balaclava)ச் சண்டையில் காயப்பட்டவர்கள் அங்கே கொண்டுவந்து இறக்கப்பட்டிருந்தார்கள்.

ஸ்குத்தாரி ஆஸ்பத்திரியிருந்த கட்டடம் பாஸ்போரஸ் ஜலசந்திக் கரையில் சமுத்திர மட்டத்திற்குச் சுமார் நூறு அடி உயர்ந்த ஓர் இடத்தில் கட்டப்பட்டிருந்தது. அது சச்சதுரமாய் கால் மைலுக்குக் கால்மைலிருந்தது. அதின் நான்கு மூலையிலும் நான்கு கோபுரங்கள் இருந்தன. அவைகளில் தென் கிழக்கு மூலையிலுள்ள கோபுரத்தில் தான் மிஸ் நைத்திங்கேலும் அவளுடன் வந்த தாதிமார்களும் இறங்கியிருக்க விடுதி யேற்படுத்தப்பட்டிருந்தது.

இவர்கள் போய் இறங்கினதும் ஆஸ்பத்திரியிலிருந்த அலங்கோலத்தைச் சொல்ல முடியாது. ஒரு படுக்கைக்கும் மற்றொன்றுக்கும் மத்தியில் ஒரு ஆள் போவதற்குக்கூட இடமில்லாமல் நெருங்கி ஒரு சுமார் நாலாயிரம் பேர்கள் கால்மாடு தலைமாடாய்க் கிடந்தார்கள். கால் முறிந்தவர்களும், கை ஒடிந்தவர்களும், மண்டை உடைபட்டவர்களும், வாந்திபேதி கண்டவர்களும், ஜன்னி பிறந்தவர்களுமாக ஒரு ஒழுங்கில்லாமல் நாலாயிரம்பேர்கள் அங்கே அடைபட்டிருந்தார்கள் என்றால் இதையெல்லாம் ஒழுங்குபடுத்த வந்திறங்கினவர்களுக்கு எவ்வளவு வேலையிருந்ததென்று சொல்லவும் வேண்டுமோ! போறுக்குறைக்கு அங்கிருந்த வைத்தியர்களோ சுத்த மூர்க்கர்கள். பிளாரென்ஸ் தன்னுடன் வந்த ஆய்ச்சிகளை வைத்தியர்கள் சொற்படி நடக்கவேணுமென்று கண்டிப்பாய் உத்திரவுபண்ணினாள். ஆஸ்பத்திரியில் சாதாரணமாய்க் கொடுக்கும் ஆகாரத்தைத் தவிர வேறு பத்தியம் கொடுக்கவேண்டியவர்களுக்கென்று ஒரு சமையல் கொட்டடியும், வியாதியஸ்தர்களின் துணிமணிகளை சுத்தம் செய்ய ஓரிடமும் ஏற்படுத்தினாள். அங்கே அவஸரத்துக்குத்தக்கபடி தானே கஞ்சி முதலியவைகள் காய்ச்சவும் ஏற்படுவாள். எல்லாவற்றிற்கும் தானே பொறுப்பாயிருந்து வெகுகண்டிப்பாய் வேலைவாங்குவாள். தனக்கு அபாயம் நேரிடுமே என்று கொஞ்சமும் அஞ்சாமல் எவ்வளவு கொடிய நோய் உள்ளவர்களிடத்தும் போய் மருந்து முதலானவைகள் கொடுத்துவருவாள். அலுப்பு சலிப்பு என்பதை அறியமாட்டாள். எங்கெங்கே வியாதி கொடுமையாயிருக்குமோ அங்கெல்லாம் இவளை சித்தமாகக் காணலாம். இவளுக்கு நோயாளிகளிடத்திலிருந்த அன்பே அன்பு: பகலெல்லாம் கூடவேயிருந்து எவர் எவர்க்கு எதெது வேண்டுமோ அததை அந்தக்ஷணமே கொடுப்பதுமல்லாமல் இராத்திரி வைத்தியர்களெல்லாம் போய் அரவம் ஒடுங்கின பின் கையில் ஒரு தீபத்தை எடுத்துக்கொண்டு மெதுவாய் ஆஸ்பத்திரி முழுக்கச் சுற்

ஷிப் பார்த்துக்கொண்டே வருவாள். இவ்வாறு இவள் அபிமானத்துடன் நோயாளிகளைப் பாதுகார்த்து வந்ததினால் அவர்களுக்கும் இவள்மேல் பிராணன். எப்போதும் சண்டை சச்சரவு செய்துகொண்டு அசத்து வார்த்தைகளே வாயில் குடிகொண்ட படைவீரர்கள் கூட எங்கே இவள் மனம் நோகுமோவென்று ஒரு அடாதவார்த்தை கூட இவள் முன்னால் சொல்லமாட்டார்கள். வைத்தியன் எதாவது கையாடவேண்டுமென்றால் 'பிராணனையாவது விடுவேன் மேலே கத்திபோடவிடமாடடேன்' என்பவன்கூட இவள் பக்கத்திலிருந்து தைரியம் சொன்னால் இவளுக்காகப் பல்லைக் கடித்துக்கொண்டு வேதனையைச் சகித்துக்கொள்வான். இவள் ஒவ்வொரு அறையிலும் போகும்போது அங்குள்ள ராணுவவீரர்கள் தத்தம் படுக்கையினண்டை வந்துநின்று ஒரு வார்த்தையாகிலும் பேசமாட்டாளாவென்று அதிக ஆவலுடன் எதிர்பார்ப்பார்கள். அவர்கள் ஊருக்



The Hospital at Scutari.—ஸ்குத்தாரி ஆஸ்பத்ரி.

குக் காகிதம் எழுதவேண்டுமானாலும் சம்பளத்தின் மீதத்தை ஊருக்கு அனுப்பவேண்டுமானாலும் எல்லாம் இவளேதான் செய்ய வேண்டும்.

இவ்வாறாக ஸ்குத்தாரி ஆஸ்பத்திரியில் ஒரு நாள் இரண்டு நாளல்ல, பதினெட்டு மாதகாலம் ஓய்வு ஒழிவுஇல்லாமல் உழைத்து ஆயிரக்கணக்காய் இறந்திருக்கவேண்டிய பிராணன்களைக் காப்பாற்றி தனக்கு அழியாக் கீர்த்தியைப் பெற்றதும்தவிர நோயாளியைப் போஷிக்கும் தாதித்தொழிலுக்கு இருந்த கெட்ட பேரையும் நீக்கி உலகத்திற்கு என்றென்றைக்கும் பயன்படும்படியான ஒரு பேருதவியைச் செய்தாள்.

யுத்தகளத்திலிருந்த சில ஆஸ்பத்திரிகளைப் பார்க்க ஸ்குத்தாரியிலிருந்து கிரிமியாவுக்குப் போனாள். போனவிடத்தில் அவளுக்கே ஜுரம்வந்து பிழைத்தது புனர்ஜன்மமாயிற்று. இங்கிலாந்துக்குத் திரும்பிப் போவதற்காகவேண்டி அவளை ஒரு கப்பலின் பேரில் வைத்தார்கள். ஸ்குத்தாரியில் தான் செய்ய வேண்டியவேலை குறையிருந்ததால் அது முடியாமல் ஊருக்குத் திரும்பமாட்டேனென்று நின்றுவிட்டாள். சண்டை முடிந்து ஆங்கிலேயர் இங்கிலாந்துக்குத் திரும்பும் வரை மிஸ் நைத்திங்கேலும் ஸ்குத்தாரியிலேயே இருந்தாள்.

தன் உயிர்க்கே அபாயம் நேரிட்டபோதும் தன் வேலையைவிட்டு வரமாட்டேனென்று பரோபகார சிந்தனையே மேலிட்டிருந்த இந்த அம்மாள் சீமைக்குத்திரும்பி வரும்போது தக்கபடி அவளை எதிர்கொண்டழைக்க வேண்டுமென்று ஜனங்கள் ஏற்பாடுசெய்து கொண்டிருந்தார்கள். மிஸ் நைத்திங்கேல் ஒருவருக்கும்தெரியாமல் ஊர்போய்ச் சேர்ந்துவிட்டாள். அன்றுமுதல் அவருயிருள்ளவரையும் தான் கிரிமியாவில் பட்ட சிரமத்தினுல் வியாதி மேலிட்டு வீட்டை விட்டு வெளியில்வருவதற்கில்லாமலிருந்தது. எவ்விதத்திலாவது இவள் செய்த பேருதவிக்குத் தங்களுடைய விசுவாஸத்தைக் காண்பிக்கும்பொருட்டு ஜனங்கள் என்னமாகிலும் செய்யவேண்டுமென்று ஆத்திரப்பட்டார்கள். தங்களுடைய வருத்தத்தை நீக்கும் பொருட்டுத் தன்னுயிரையும் இழக்க சித்தமாயிருந்த இம்மாதுசிரோமணிக்குத் தங்களாலியன்றமட்டும் தாங்களும் எதுவாவது செய்யவேண்டுமென்று ராணுவ வீரர்களும் ஆவலாயிருந்தார்கள். ஆகவே எல்லாருமாகச் சேர்ந்து "நைத்திங்கேல் பண்டு" என்று ஒரு நிதி சேர்த்தார்கள். அது ஒரு சுமார் இலட்சம் ரூபாய் சேர்ந்தது. அதைக் கொண்டு பிளாரென்ஸ் நைத்திங்கேலின் இஷ்டப்படியே ஆஸ்பத்திரிகளில் நோயாளிகளைப்போஷிக்கத் தாதிகள் பயிற்றுவதற்காக "நைத்திங்கேல் ஹோம்" ஒன்று கட்டியிருக்கிறார்கள். மாக்ஷிமைதங்கிய மகாராணியவர்களும் நைத்திங்கேலுக்கு வைரங்கள் இழைத்த ஆபரணமொன்று "நைத்திங்கேல் கிரிமியாவில் தன்னுடைய ராணுவ வீரர்களைப் பாதுகாத்ததற்காக ராணி விக்டோரியாவினுல் கொடுக்கப்பட்டது" என்னும் எழுத்துக்கள் வெட்டிப் பரிசாய் அளித்திருக்கின்றனர்.

மிஸ் நைத்திங்கேல் எவ்வளவு நோயாளியாயிருந்தாலும் அவர் செய்துவந்த பரோபகாரத் தொழில்களில் ஒன்றும் குறைவேயில்லை. 1858-ஆ௵த்தில் "நோயாளிகளைப் போஷிப்பதைக் குறித்துச் சில குறிப்புகள்" என்று ஒரு புத்தகம் எழுதினாள். அதில் சில அருமையான உண்மைகளை வெளியிட்டிருக்கிறாள். வியாதியஸ்தனுக்கு முதலில் வேண்டியது நல்ல காற்று. இது நம்மவர்க்குத் தெரிகிறதேயில்லை. கொஞ்சம் உடம்பு பளுவாயிருக்கிறதென்றால் உடனே சூரியகிரணமென்பதே கண்டிராத ஒரு இருட்டறையில் அடைத்துவிடுகிறார்கள். இது இரண்டு காரணங்களினுல் கெடுதல். முதலாவது நல்ல காற்றோட்டம் கிடையாது. இரண்டாவது தக்க வெளிச்சமில்லை. சவுக்கியமாயிருப்பவனையே ஒரு உள்ளேபோட்டு அடைத்து வைப்பதானுல் சகிக்கமாட்டானென்றால் ஏற்கனவே கஷ்டப்படுபவர்களை அப்படி அடைத்தல் யுக்திக்காவது புத்திக்காவது ஒற்றதாயிருக்கிறதா? பிளாரென்ஸ் நைத்திங்கேல் சொல்லுகிறபடி அநேகம் வியாதிகளில் வியாதியஸ்தர்கள் படும் கஷ்டமெல்லாம் வியாதியினுல் உண்டாவதில்லை; தக்க காற்றோட்டம், அமைதி, வெளிச்சம், உஷ்ணம் இவைகளில்லாததினுல் உண்டாகின்றன. வியாதியஸ்தனை எப்பொழுதும் ஒரு கட்டிலில் படுக்கவைத்து அவன் மெத்தையின் உறை, போர்வை, துணி இவைகளை அடிக்கடி மாற்றிக்கொண்டேயிருக்கவேண்டும். மேலும் அவனுக்குக் கொடுக்கும் பத்தியத்தைக் காலாகாலத்தில்கொடுக்கவேண்டும்.

பின்னும் வியாதியின் ரீதியை நன்றாய் அறிந்து அதற்குப் பரிகாரமும் தெரிந்தவர்கள் தவிர மற்றவர்கள் அவனிடம்போய் உட்கார்ந்துக்கொண்டு, இது இப்படியிருக்குமோ இதற்கு இப்படிப் பார்க்கக்கூடாதுபோலிருக்கிறதே; இன்றைக்கு இப்படித்தான் வந்திருந்தது, அதற்கு இன்ன இன்ன செய்தார்கள். என்றிவ்வாறு பேசவிடுவது மிகவும் கெடுதி. இவ்வாறு இன்னும் எவ்வளவோ அந்த அம்மாள் தன்னுடைய சொந்த அநுபவத்திலிருந்து எழுதியிருக்கிறாள். ஒரு வியாதியஸ்தனுக்கு ஒரு கொத்துப் பூ, ஒரு நல்ல படம் இவைகள் மிகவும் நன்மைசெய்கின்றன. மிஸ் பிளாரென்ஸ் நைத்திங்கேல் தான் கிரிமியாவில் வியாதியாயிருக்கும்போது ஒரு சிநேகிதர் ஒரு கொத்து ரோஜாமலர் அனுப்பியதாகவும் அது தன் கைக்கு வந்ததுமுதல் தனக்கு சுவரம் சீக்கிரம் சுவஸ்தமாயிற்றென்றும் எழுதியிருக்கிறாள்.

நெடுநாளாய் வியாதியுடன் இருப்பவர்கள் ஒரு நாய்க்குட்டி, பூனைக்குட்டி அல்லது கிளிப்பிள்ளை எதுவாவது வைத்து வளர்ப்பது அவர்களுடைய வியாதிக்கு வெகு அநுகூலமென்று மிஸ் நைத்திங்கேல் மற்றொரு இடத்தில் எழுதியிருக்கிறாள்.

(இவ்வகைச் சாதனங்களெல்லாம் மனோற்சாகத்தால் தேஹவியாதி சீக்கிரத்தில் குணப்படுகிறதென்பதை ஸ்தாபிக்கிறதாயிருக்கிறதன்றி வேறில்லை.)

1857-ஆ இந்தியாவில் பெரிய ராணுவக்கலகம் நேர்ந்தபோது வெள்ளைக்கார ராணுவ வீரர்கள் அநேகர் வியாதியினால் மரித்தார்கள். அவர்கள் அப்படிச் சாகாவண்ணம் பாதுகாக்கச் சில ஏற்பாடுகள் செய்யவேண்டுமென்று மிஸ் நைத்திங்கேல் கவர்ன்மெண்டார்க்கு எடுத்துச்சொல்லி உதவி புரிந்தாள். அன்றி ஆஸ்பத்திரி சீர்திருத்த விஷயமாயும் இராணுவங்களின் சுகாதார விஷயமாகவும் எத்தனையோ அருமையான சாதனங்களை யெடுத்துக் காட்டி கவர்ன்மெண்டாருக்கு மிகசிலாக்கியமான உதவிகள் புரிந்திருக்கிறாள். இதெல்லாம் செய்தபோது அந்த அம்மாளுக்கு வயது 75. இவ்வளவு வார்த்திபமடைந்தவரா யிருப்பதோடு நோயாளியாய் வீட்டைவிட்டு வெளிப்புறப்படக் கூடாமலிருந்தாலும் அவர் தம்முடைய அறையிலிருந்த வண்ணம் ஜனங்களுக்கும் இராஜாங்கத்துக்கும் செய்த உதவி அற்பசொற்பமில்லை. இராணுவ சுகாதார சம்பந்தமாயும் ஆஸ்பத்திரிகள் சம்பந்தமாயும் சென்ற 50-வருஷ காலத்தில் உண்டான சீர்திருத்தங்களெல்லாம் அந்த அம்மாளுடைய முயற்சியாலும் ஆலோசனை உதவியாலுமேயென்று சொல்லலாம். அனேகவருஷகாலமாக அந்த அம்மாள் இந்தியாவில் வசிக்கும் ஜனங்களின் சுகாதார நிலைமையைச் சீர்ப்படுத்தவேண்டி இந்தியா அதிகாரிகளுக்கு எழுதி அவர்களை அது விஷயத்தில் அடிக்கடி தூண்டிவந்தார்கள்; லார்ட் டப்பிரின் பிரபுகாலத்தில் ஏற்பட்ட சீர்திருத்தங்கள் அந்த அம்மாள் சொன்னதை குருவாக்காக மதித்து அவர் நடந்துகொண்டதின் பலனென்று அவரேசொல்லியிருக்கிறார். இந்தியாவில் கிராமாந்திரங்களின் சுகாதார நிலையை விர்த்தி செய்யவேண்டுமென்று அதற்காக இந்தியாவிலுள்ள ஜனசிரேஷ்டர்களோடு கடிதப்போக்கு வரவு வைத்துக்கொண்டு அவர்கள் மூலமாய் இந்தியாவிலுள்ள கிராமக்குடிகளின் விருப்பு வெறுப்புகளையும் ஆசார அனுஷ்டானங்களையும் அறிந்துகொண்டு அவர்களுடைய மனோபாவத்துக் கிசைந்தபடி சுகாதாரத்துக் கடுத்த சீர்திருத்தங்கள் செய்ய வேண்டியதைப்பற்றி அந்தியம் வரையில் அதிகமுயற்சி யெடுத்துக்கொண்டுவந்தார். ஐரோப்பாவில் கூடும் சுகாதார விர்த்தியைப்பற்றி யோஜிக்கும் காங்ரெஸ் மஹாசபையில் இந்தியாவுக்கு வேண்டிய சீர்

திருத்தங்கள் இன்னவென்று கவனிக்கும்படி செய்து அச்சபையாருக்கு இந்தியா விஷயத்தில் சிரத்தையுண்டாகச் செய்ததும் இவரே. நமது கிராமாந்திரங்களும், பட்டணங்களும் வெகு ஆபாசமாய் இருப்பதை நிவிர்த்தி செய்யும்படி சர்க்காரை மிகவும் தூண்டிவந்தது மல்லாமல், ஜனங்களுக்குள் படிப்பும் செல்வாக்கும் உடையவர்கள் ஊரூராய்ப்போய் ஊர்களைச் சுத்தமாய் வைத்துக்கொள்ளும் விதங்களை அநுசரித்துக் காட்டவேண்டுமென்று இந்திய பத்திரிகைகள் மூலமாக ஒரு கடிதமெழுதிப் பிரசுரஞ் செய்தார். இப்படி இன்னும் எத்தனையோ விதங்களில் அந்த அம்மாள் தன் அறையைவிட்டு வெளிப் போகாமலிருந்தும் உலக விஷயங்களை நன்றாகக் கவனித்து லோகோபகாரம் செய்வதே மணியமாயிருந்தாள். அவர் காலஞ்சென்றபின் அவருடைய பேரால் "கிராம சுகாதார சகாயநிதி" யென்று மிஸ்டர் வெட்டர்பர்ன் அவர்கள் (Nightingale Village Sanitation Fund) ஏற்படுத்தியுள்ளார். அது விஷயமாய் இன்றைக்கும் வேலை நடந்து வருகிறது. நாம் கிராமங்களின் சுகாதார நிலைமைப்பற்றி யுழைத்தபோது மிஸ்மானிங் மூலமாய் இந்த அம்மாள் எடுத்துக்கொண்ட சிரத்தையினால்தான், மேன்மை தங்கிய எட்வர்ட் இளவரசர் நம் சிறுமுயர்சியை நன்கு மதித்துவக்கலானார் என்று சொல்லலாம். அவர் சமீபகாலத்திற் காலஞ்சென்றும் புகழுடம்பெடுத்து நம்முள் வசிக்கிறார் என்றே சொல்லவேண்டும். இப்பொழுது ஐரோப்பாவில் நடக்கும் மஹாபாரத யுத்தத்தில் காயம் பட்டவர்களுக்கும் சிக்காய் விழுந்தவர்களுக்கும் செய்துவரும் உபசாரங்களெல்லாம் அந்த அம்மாள் உதாரணத்தாலும் மதியூகத்தாலும் செய்த சீர்திருத்தங்களின் பலனே.

## ON NATIONAL SELF-RESPECT
OR
## IN PRAISE OF BRITISH CHARACTER.

"CHARACTER ASSERTS ITSELF"

"The issue was one which no great and self-respecting nation, certainly none nurtured like ourselves in this ancient home of liberty, could, without undying shame, have declined."—*The* Prime Minester of England on the present War.

## தன்மதிப்பு
அல்லது
## ஆங்கிலேயர் குணமாட்சி.

"தன்னை மதியாதார் தலைவாசல்
மிதிக்க வேண்டாம்."

1. ஆங்கிலேயர் குணமாட்சி.
The British Character.

பிறவியந் தகனிரண்டு கண்களும
பெற்ற தென்கோ?
அறவுறு மிடியனுங்கே யடைந்ததோர்
நிதிய மென்கோ?
சிறுவரில் மலடிபெற்ற சேயிளஞ்
செல்வ னென்கோ?
முறைசெய் ஆங்கிலேயர் குணமாட்சியை
மொழியின் நாமே.

2. ஆங்கிலர் தம்மரசுமஹிமை.
The British Principle of Liberty.

பாலையில் உழல்வார்க் காங்கோர் பசும்
பொழில் கிடைத்ததென்கோ?
வேலையில் வருந்து வார்க்கோர்
துறைமுகம் விளங்கிற்றென்கோ?
ஆலைவாய்க் கரும்புபோல உடைந்தயர்ந்
தார்க்கிக் கம்மா
மேலை நற்றவத்தால் மேவிவ்
வாங்கிலர்தம் மரசுதானே.

3. தர்மஸ்தாபன கடன் மஹிமை.
Their Native Love of Righteousness.

மனுவென்றும், மாந்தா தாவாம்
மன்னென்றும், வளரும்கீர்த்தி
தனிநின்ற குலைவில் வாய்மை
தழுவரிச் சந்த்ரன்என்றும்,
இனிநின்ற அரசர்எல்லாம் கதையினில்
இயம்பல் அல்லால்,

முனைவென்றி பிரித்தர் † போலும்
மொழியவிங்கொருவர் உண்டோ!

4. தர்மமே ஜயமென்னும் கொள்கை.
Their Faith in the Triumph of Righteousness.

நாடுநல் நிதியம் வேண்டி நளிர்கடல்
கடந்து போந்தார்,
தேடும் ஆங்கிலம் ஆம் தங்கள்
தேயம்விட்டிவண்காண் என்பர்;
நீடிய அறம்தான் நான்கு
பாதமேல் நின்று லாவக்,
கூடிய தவமே இன்னார்க்
கொணர்ந்ததென் றுரைப்பேன் யானே.

5. ஆங்கில ஜாதியின் குணவிசேஷம்.
Their National characterestics.

முரணிய பகைவர் தம்மை முனையினில்
முருக்கி, இந்தத்
தரணியில் தமது கோலை நாட்டினர்
என்ப தென்னே?
கருணையும், கொடையும், தூய
நீதியும், கற்பின் மாண்பும்
அரண்என நாட்டினரால் ஆங்கிலர்
இவர்தாம் அன்றே.

6. நடுநிலைமதியின் நுண்மை.
(Their Keen Love of Fairplay).

உடைதிரைக் கடல்சூழ் ஞாலம் முழுதும்
ஓர்குடைக்கீழ் ஆள்வார்
படைவலி பெரிதென் கோயான்
பயன்தரு வினையினலே
குடிகளைக் கண்ணில் காக்கும்
கொள்கையால் இவர்தம்தூய
நடுநிலை மதியின் நுண்மை நலம்
பெரிதென்கோ இன்றே!

7. அசுரவேர் அறுக்கும் அன்னர்.
Siding with Right against Might.

வசையுறு மன்னர்தங்கள் வலியெலாம்
அடக்கி மண்ணில்
இசைபெற உயிர்கள் யாவும்
இன்புறக் காக்கும் இன்னர்க்
கசுரவேர் அறுத்து ஞாலம்
அருளினல் காத்தவள்ளல்
பசுமுகில் வண்ணன் அன்றி
ஒருவரைப் பகரல் ஆமோ?

† The British.

8. அநீத அரசு கண்டனர்.
Their Role as Champions of Right and Justice.

ஆர்கலி உலகில் ஆங்காங் கநீதமா
அரசு கொண்ட
போர்வலி யவரை நீக்கிப் புரவலர்க்
குரிமை ஈந்தார்
சூர்வலி தடிந்து வானத்
தரசுவாசவற்குச் சூட்டும்
கார்மலி தோகை வாகற்
கிணையலால் கழறல் ஆமோ!

9. இதுவுமது.
(Ibid.)

கொஞ்சமில் கொடுமை செய்த
கூற்றம் அன்னவர்தம் ஆவி
வெஞ்சமர் அதனில் உண்டு
விரிகடல் உலகம் எல்லாம்
நெஞ்சகம் களிக்கக் காத்த
நிருபருக் குவமை கூறில்
நஞ்சம் உண்டுலகம் காத்த
நம்பனே அல்லால் உண்டோ?

10. பீடுசால் அரசி செங்கோல்.
(The Queen's Proclamation of 1858.)

வாடல் இன்றுலகம் இன்பின்
வதிந்திட எமக்குநேரும்
கேடிலை; குடிகள் உள்ளம்
கிளாந்தெழும் அன்பின் என்றும்
கூடுநன் றுணர்தலேநாம்
கொள்ளும்வண் பரிசாம்'' என்ற
பீடுசால் அரசி செங்கோற்
கிணையொன்று பேசல் ஆமோ!

11. வேற்றுமை சாற்றல் இன்மை.
Their Impartiality & Unifying Influence.

தமரென்றும் பிறர்தாமென்றும்
வேற்றுமை சாற்றல் இன்றி
அமர்தரும் சீர்களெல்லாம்
அனைவர்க்கும் ஒருங்கே ஈந்து
சமயமும் பயிலும் தத்தம் சாதியின்
நெறியும் குன்று
தமையவே உலகம் ஆள்வார்
இவர்புகழ்க் களவும்உண்டோ!

12. வாழி.
Prayer for Blessings.

வான்புகழ் இனைய ஆங்கிலேயர்
தம் அரசு வாழ்க!
மீன்படர் கடல்சூழ் ஞாலத்
துயிரெலாம் விருப்பின் வாழ்க!
தேன் பொழிந்தமுதம் ஊற்றும்
தமிழ்மகள் சிறந்துவாழ்க!
தான்பகர் உண்மை வேதத் தனி
நெறி தழைக்க! மாதோ,

## READINGS FROM THE BOOK OF NATURE

"EARTHQVAKES"

### பிரகிருதி வித்தியாம்சம்.

பூகம்பங்கள்.

முந்தின சஞ்சிகையில், பூமியின் உட்புறத்தில் அதிகமாய்க் காய்ந்து கொந்தளித்துக் கொண்டிருக்கும் வஸ்துக்கள் இருக்கும் பாகங்களுக்கும், பூமியின் மேற்புறத்திற்கும் போக்குகளுண்டாய், அவைகளின் மூலியமாய், 'எட்னு' 'கொடபாக்ஸி,' விசூவியஸ், முதலிய பெரிய எரிமலைகளைப்போன்ற மலைகளை உண்டாக்கத்தக்கதாய், அவ்வளவு தூசுகளும், கற்களும், கற்குழம்பு வெள்ளமுதலியவைகளும், பூமியின் உட்புறத்திலிருந்து வெளியே கக்கப்படுவதைக் குறித்தும், இவ்விதமாய் ஆக்கப்பட்ட எரிமலைகளைக்குறித்தும், சொல்லியிருக்கிறோமல்லவா. இது போலவே பூமியின் உட்புறத்திலிருக்கும் சூட்டினாலும், இன்னும் வேறு சில காரணங்களாலும், பூமியானது திடீரென்று அதிக கரோமாயும், அல்லது நம்முடைய நோக்கத்திற்கு தெரியாமலே மெதுவாயும், சலனமாவதுண்டு. சில சமயங்களில பூமி வெகு உக்கிரமாய் அசைக்கப்பட்டு பெரிய பிளவுகளுண்டாவதும், சில விடங்கள் சமுத்திர மட்டத்திற்கு கொஞ்சம் கொஞ்சமாய் உயர்த்தப்படுவதும், சில விடங்கள் படிப்படியாய் பள்ளத்தாக்காக ஆக்கப்படுவதும் வழக்கம். பூமியின் இவ்வித அசைவுகளால், அதன்மேற்புறத்தில் அனேகவித மாறுபாடுகள் உண்டாவதால், இவ்விஷயத்தைக்குறித்து யாவரும் அறிந்துகொள்வது அவசியமே. இவ்வித அசைவை, (1) பூகம்பங்கள், (2) பூமியின் கிளர்ச்சி, (3) பூமியின் தணிவு, என மூன்று பிரிவுகளாகப் பிரித்து தனித்தனியாய் ஒவ்வொன்றைக் குறித்தும் எழுதுவோம்.

1. பூகம்பங்கள்.

பூகம்பங்கள் என்பது பூமியின் அதிர்ச்சிகள் அல்லது நடுக்கங்கள். அவைகளில் சாமானியமானவை அதிகபாரமேற்றிய ஒரு பெரியவண்டி சற்றே விரைவாய்ப் பாதையில் ஓடும்போது பூமியில் உண்டாகும் ஒரு கிடுகிடுப்பான நடுக்கத்திற்கு சமமானதாக விருக்கும். மேலும் நமது வீடுளில் உரலில் தானிய முதலானவைகள் உலக்கையால் இடிக்கப்படும்போது சமீபத்தில் வைக்கப்பட்டிருக்கும் பாத்திரங்களும், சாளரக்கதவு முதலானவைகளும், சலகலவென்று சற்றே அசைவதைப் பார்த்திருக்கிறோமல்லவா. உலக்கையால் உரலானது புடைக்கப்படும்போது, அதன் மூலியமாய் பூமிக்கும் அந்த விசையானது தாக்கவே, பூமியில் அதிர்ச்சி உண்டாகிறது. இந்த அதிர்ச்சியால்தான் பாத்திரம் முதலியவைகள் ஆடுகின்றன. இதையும் ஒரு சாமானிய பூகம்பத்திற்கு உதாரணமாகச் சொல்லலாம. அவைகளில் உக்கிரமானவைகளோ, பூமியை ஒரே குலுக்காய்க் குலுக்கி, மலைகளின்பேரில் இருக்கும் விடுதிப் பாறைகளை புரட்டித்தள்ளியும், மரங்களை வேரோடு பிடுங்கி வீழ்த்தியும், பெரிய நகரங்கள், கிராமங்கள், கோட்டைகள், கொத்தளங்கள் முதலிய யாவற்றையும் நீர்த்தூளியாக்கியும், பெரிய கேடுகளை விளைவிக்கும்.

பூகம்பங்களைச்குறித்து ஜனங்களுடைய அபிப்பிராயம்.

இந்துக்களும், பௌத்தர்களும் பூகம்பங்கள் உண்டாவதைக்குறித்து பலவிதகாரணங்களைச் சொல்லுகிறார்கள். இப்பூகோளமானது, ஆயிரம் முடிகளைப் படைத்த ஆதிசேடன் என்னும் ஒரு பெரு நாகத்தால் தாங்கப்பட்டிருப்பதாகவும், இச்சர்ப்பமானது ஒரு பென்னம் பெரிய ஆமையின் முதுகின்பேரில் மண்டலமிட்டு நிற்பதாகவும், இந்த ஆமையை எட்டுத் திக்கிலும் எட்டியானைகள் நின்று தாங்கியிருப்பதாகவும், இந்துக்கள் உருவக உருவமானம் சொல்லுகிறார்கள். இப்பெருநாகமாவது, †

† நாத தத்துவத்துக்கு உருவகம்.

அல்லது யானைகளாவது ‡ பிரமாண்டமாகிய இப்பூகோளத்தை ஒரே, நிலையில் தாங்கி நிற்பதில் சற்றே களைத்து நிலையைமாற்றக்கருதி இடம் பெயர்வதினால் பூமியானது நடுங்குவதாகச் வெகு அழகாய்க் கதை சொல்கிறார்கள். பௌத்தர்களோ, இப்பூமியானது ஒரு பெரு ஆழியில் மிதந்துகொண்டிருப்பதாகவும், சமுத்திரம் வாயுமண்டலத்தில் நிற்பதாகவும், வாயுமண்டலம் ஆகாயவெளியில் பரவியிருப்பதாகவும் சொல்லிக் கொள்கிறார்கள். வாயுமண்டலத்தில் பெருங்காற்று எடுத்து வீசும்போது, அது ஜலமண்டலத்தை கொந்தளிக்கச் செய்து, அதன்மேல் மிதந்துகொண்டிருக்கும் பூகோளத்தை நடுங்கச்செய்கிறதாம். பானியர்கள், இப்பூமியின் கீழ் ஒரு பெருந்திமிங்கிலம் இருந்து அதைத் தாங்கிக்கொண்டிருப்பதாகவும், அது தூங்கிக்கொண்டிருக்கும்போது பூமி அசைவற்று நிற்பதாகவும், நித்திரைபொழிந்து தனது உடலை நெளித்துக்கொள்ளும்போது பூகம்பங்கள் உண்டாவதாகவும் சொல்லுகிறார்கள். மேற்சொல்லிய விஷயங்கள் யாவரும் பிரமாணமாய் அங்கிகரித்துக் கொள்ளததக்க யாதாவது சாஸ்திரங்கள் மூலியமாய் நாம் அறிந்துகொண்டவைபல்லாமற் போனாலும், ஜனங்களுக்குள் இந்த அபிப்பிராயங்கள் சாதாரணமாய் தொன்றுதொட்டு வழங்கிவருகின்றன. இப்படி வழங்கிவரும் காரணங்கள் சரியானவைகளல்ல. அவைகள் உண்மையாயிருக்குமாயின் பூகம்பங்கள் சாதாரணமாய் உண்டாவது போல ஒரே தடவையில் பூமியின் ஒரு சிறிய பிரதேசத்தில் மாத்திரம் காணாமல், உலகமுழுதும் ஒருங்கே நேர்ந்து பூமியானது ஒரே குலுக்காய்க் குலுக்கப்படவேண்டும். ஆனாலும் பெயர்பெற்ற தற்காலத்திய ஐரோப்பிய புவன உறுப்பிலக்கண சாஸ்திரபண்டிதர்களாலும் பூகம்பங்கள் உண்டாவதின் உண்மையான காரணங்கள் இவைகள் தாமென்று நிச்சயமாய்க்கண்டுபிடிக்கப்படடதாகவில்லை. வானத்தில் அனேககோடிமைல்களுக்கப்பால் இருக்கும், சூரியன், சந்திரன், நக்ஷத்திரங்கள் முதலிய பல கிரகங்களைக்குறித்து, அவைகளின் பிரமாணம் இன்னதென்றும், இன்ன கிரகம் இதைச் சுற்றி ஓடுகிறதென்றும், அக்கிரகங்களில் தோன்றும் களங்கங்கள் அவைகளில் இருக்கும் சமுத்திரங்கள், பனிமூடிய மலைகள் முதலியவைகளின் சாயலென்றும், இன்னும் அவைகளில் உள்ள பலவிதமான விசேஷங்களையும் சுலபமாய் கண்டுபிடிக்கத்தகுதியான தூரதிருஷ்டிக்கண்ணாடி முதலாகிய அருமையான கருவிகளைக் கண்டுபிடித்திருக்கிறார்களே. இதுமாதிரியாகவே நமது கால்களுக்குக் கீழ் இருக்கும் இப்பூகோளத்தின் உட்புறத்தில் நடக்கும் அனேகமான மாறுபாடுகளைக் கண்டறிய மானிடர்களாலாகாதது மிகவும் ஆச்சரியமே என அனேகர் நினைக்கக்கூடும். வானமோ நமதுகண்முன் நிற்கும் வெளியாய் இருக்கிறது. ஆனால் பூமியோ பெரும்பாறைகள், மண்முதலியவற்றால அமைக்கப்பட்டு கடினமானதாகவிருப்பதாலும், உள்ளே தோண்டிக்கொண்டு வெகு ஆழம் போவதற்கு, அவ்விடத்தில் வாயுவின்மையாலும், காலாக்கினி போன்ற சூடானது இடங்கொடாததலாலும், அதன் உட்புறத்தில் நேர்ந்துவரும் மாறுபாடுகளைக் கண்டறிய பலவிதத்தாலும் ஏலாததாயிருக்கிறது. ஆனாலும் அனுபவத்தைக் கொண்டும், இன்னும் பல பரீக்ஷைகளைக்கொண்டும், பூகம்பங்கள் உண்டாவதற்கு சில காரணங்கள் ஊகிக்கப்படுகின்றன. அவைகளை இவ்விடத்தில் சற்றே சுருக்கமாய்ச் சொல்வோம்.

‡ ஆவரண சக்திக்கு உருவகம்.

**பூகம்பங்கள் உண்டாவதற்குச் சில காரணங்கள்.**

பகம்பங்களில் மிகவும் சாமானியமான நடுக்கங்கள், சமபங்களில் வாயு மண்டலத்தின் விசையின் மாறுபாடுகளாலும், சூரியன் சந்திரன் இவைகளுடைய கவர்ச்சிகளாலும் உண்டாகக்கூடும் என்று சில பண்டிதர்கள் சொல்லுகிறார்கள். ஆனால் பெரிய பூகம்பங்களோ, பூமியின் உட்புறத்தில் உண்டாகும் மாறுபாடுகளினாலேயே உண்டாகவேண்டும்

என்று நிச்சயிக்கப்படுகின்றன. முக்கியமாய் அக்கினிமலைகள் உள்ள பிரதேசங்களிலும், இன்னும் சில விடங்களிலும் பூமியின் உட்புறத்தில் உள்ள பெரிய பிலங்களின் மேற்றளங்கள் அவைகளின் வேற்புறங்களில் தங்கி நிற்கும் பெரும் பாரத்தை தாங்கமுடியாமல் பிளவுகள் கண்டு இடிந்து நொருக்குண்டு விழுவதால் உண்டாகும் அதிர்ச்சிகளால் பூகம்பங்கள் உண்டாகக்கூடும். மேலும் பூமியின் சூடுண்ட பாகங்கள் சில சமயங்களில் ஏதாவது காரணங்களால் குளிர்ச்சி யடையும்போது சுருங்குவதால், அச்சமயங்களில், அவைகளில் பிளவுகள் உண்டாய் இடிந்துவிழும் அதிர்ச்சிகளாலும் பூகம்பங்கள் நேரிடலாகும். அல்லது, பூமியின உட்புலத்தில் இருக்கக்கூடும் அதிக உஷ்ணமுள்ள பெரிய பிலங்களில் தண்ணீர் வந்து சேர்ந்து, அவ்விடத்தில் விசேஷமாய் நீராவி உண்டாய்ப் பரவுவதால் வெடிப்புகள் கண்டு, அவைகளாலும் பூமி அதிரலாம். எரிமலைகள் கொதிப்பெடுக்கத் தொடங்கி வெடித்தெழும்போதெல்லாம் பூகம்பங்கள் உண்டாவது வழக்கம். இதைக் குறித்து, எரிமலைகளைப்பற்றி எழுதியிருப்பதில் சொல்லப்பட்டிருக்கிறது. கொதிப்பெடுக்கும் எரிமலைகள் உள்ள பிரதேசங்களில்லாமல் மற்ற இடங்களில் உண்டாகும் பூகம்பங்களுக்கு காரணங்கள் இன்னவை என்று இன்னமும் சரிவரப் புலப்படவில்லை. ஆனாலும் பூமியின் உட்புறத்தில், மேலே குறிப்பிட்ட பலவித காரணங்களால், திடீரென்று உண்டாகும் ஒரு வெடிப்பைப் போன்ற உக்கிரமான வேகத்தின் காரணத்தால் தான் பூகம்பங்கள் உண்டாகின்றனவென்பது நிச்சயம். இப்படி இடி உண்டான இடத்திற்கு சரியான, பூமியின் மேல்பாகத்தில் தான் பூகம்பங்கள் அதிக கொரேமானவைகளாயிருக்கின்றன. இந்த மத்தியபாகத்திலிருந்து பூமியின் சலனமானது பரவுவதில் தூரம் செல்லச்செல்ல அதன் உக்கிரம் தணிவுபடும். இதற்கு உதாரணமாக, சற்றேனும் அசைவில்லாமல் தண்ணீர் நிலைத்து நிற்கும் ஒரு குளத்தில் ஒரு சிறிய கல்லை எறிவதினால் அதில் உண்டாகும் மாறுபாட்டைச் சொல்லலாம். கல்லானது தண்ணீரில் விழுந்த இடத்தில் சிறிய அலைகளைப்போன்ற வட்டங்கள் உண்டாய் அப்படியே வெளிப்புறமாக பெரிய வட்டங்களாய்ப் பரவி கடைசியாய் ஒன்றுக்கொன்று அதி தூரமுள்ளவைகளாயும், கண்ணுக்கு வட்டமாய்த் தெரியாமலும் மழுங்கிப் போய் விடுகின்றன அல்லவா. இது மாதிரியாகவே பூகம்பங்களானவை, அவைகளின் உற்பத்தி ஸ்தானங்களிலிருந்து சுற்றிலும் பரவப் பரவ வலிமையில் குறைவுபடும். இப்படி அலைகளை ஒத்த சலனமன்றியில், பூகம்பங்களால் பூமி சற்றே மேலே கிளம்புவதுமுண்டு. இதுவுமல்லாமல் பூகம்பங்கள் நேரிடும்போது பூமியின் உட்புறத்திலிருந்தும், ஆகாயத்திலிருந்தும், ஒருவித குமுறலான சத்தங்கள் உண்டாவதுண்டு. பூகம்பங்கள் சாதாரணமாய் பூமியின்மேற்புறத்தில் காணப்படுவதற்கு முன்னர் பூமியின் உட்புறத்தில் உண்டாகும் இடங்கள், தரைமட்டத்திற்கு ஏறக்குறைய 30-மைல்களுக்கு உள்ளாகவே இருப்பதாக ஊகிக்கப்படுகின்றன.

### பூகம்பங்களினால் தரையில் உண்டாகும் மாறுபாடுகள்.

பூகம்பங்களினால் உண்டாகும் அதிக கொரேமான பிராணச்சேதமும், பண்டச்சேதமும், நாடு நகரங்களின் நாசமுமே, அவைகளின் முக்கியமான காரியங்களாகக் காணப்படுகின்றன. இவ்விதங்களான பல நாசங்கள் உண்டாயினும், பூகம்பங்களால் நமது பூகோளத்தின் மேற்புறத்தில் உண்டாகும் ஸ்திரமான மாறுதல்கள் சொல்பமே. நமக்கு முன் பின் பூகம்பங்கள் உண்டாகப்போகின்றனவென்று யாதொரு அறிவிப்புமில்லாமலே, திடீரென ஒரு க்ஷணப்பொழுதில், வெகு தூரத்தில் இடி இடிக்கும் கர்ச்சனைபோலவும், அல்லது, பெரிய பீரங்கிகளிலிருந்து வெடிகள் தீர்க்கப்படுவது போலவும், சத்தங்கள் உண்டாய் நமது தேசங்களில் ஒரு அச்சத்தை உண்டாக்கும். ஏதோ

ஒருவித பயங்கரமான சத்தமுண்டாகின்றதே இது என்னவோ தெரியவில்லையே, என்று மனிதர்களில் ஒருவருக்கொருவர் கேட்டுத் தெளிவதற்கு முன்னர், இக்கொடும் பூகம்பங்களானவை அவர்களுக்குள் உண்டாகிய சந்தேகத்தை ஒழிப்பனவாய் அவர்களை ஒரே குலுக்காய்க் குலுக்கி விடுகின்றன. பூமியானது இத்தருணங்களில் நமது பாதங்களுக்குக் கீழ், ஒருவன் பெருமூச்செறிவதினால் அவன் மார்பானது எப்படி முன்னுக்கு வந்து பிற்பாடு தணிகிறதோ அது மாதிரியாக, மேலே உப்புவதுபோல கிளம்பி மறுபடியும் தணியும். வீடுகள், பெரு அலைகளில் அகப்பட்டுத் தத்தளிக்கும் கப்பல்களைப்போல் முன்னும் பின்னுமாக ஊசலாடி, அடி முதல் முடிவரையில் பிளவுகள் கொண்டோ, அல்லது, ஒரே அடியாயோ விழுந்து நீர்தூளியாகிவிடும். இச்சமயங்களில் பூமியானது இங்கும் அங்கும், கொடும் பசியால் உபாதையுண்டு தவித்துக் கிடக்கும் ஒரு ஒரு புலி இரையைக்கண்ட உடன் வாயைத்திறப்பதுபோல், பிளவுகள் கண்டு, அவைகளில் அகப்பட்டவைகளுடன் மறுபடி மூடிக்கொள்ளும். இவ்வாறாக ஒரு க்ஷணநேரத்தில் பெரிய நகரங்கள் முதலியவைகள் இடிந்து தும்ஸமாக்கப்பட்டு அவைகளில் வசிக்கும் லக்ஷக்கணக்கான மானிடர்களையும், மிருக பக்ஷி ஜாதிகளையும், இறந்தவர்களும், இறப்பவர்களுமாக்கி, ஒரு நொடிக்கு முன்னர் பலவித சம்பத்தாலும் பெருமை பெற்று விளங்கிய பட்டணங்கள், பார்ப்பவர்கள் நடுங்கும்படியாய் பெரிய பிணக்காடுகளாக்கப்படும். பெரிய பூகம்பங்கள் ஆன உடனே அடுத்து அடுத்து அவ்வளவு உக்கிரமில்லாத சாமானிய பூகம்பங்கள் உண்டாவது வழக்கம்.

பூகம்பமானது, சமுத்திரத்தில் உண்டாகும் அலைகளைப்போல, நிலத்திலுண்டாகும் அலைகளென்று சொல்லலாம். ஒரு துறைமுகத்தில் நங்கூரங்கள் பாய்ச்சி நிறுத்தப்பட்டிருக்கும் கப்பல்களின் மேற்புறத்திலுள்ள பாய்மரங்கள், முன்னும் பின்னுமாக ஆடிக்கொண்டிருக்கப் பார்த்திருக்கிறோமல்லவா? இவைகளின் காரணம் கப்பல்களுக்கு அடியில் சமுத்திரத்தின் அலைகள் புரண்டு செல்வதாலல்லவோ! இதுமாதிரியாகவே பூகம்பங்கள் உண்டாகும்போது, மரங்கள், கோபுரங்கள் முதலிய உயரமான வஸ்துக்கள் முன்னும் பின்னுமாக ஊசலாடப் பார்க்கலாம்.

உன்னதமான கரைகளிலிருந்தும் குன்றுகளிலிருந்தும் பூகம்பங்களின் அதிர்ச்சிகளால், பெரிய களிமண் திட்டுகளும், பெரும்பாறைத் திடல்களும், விடுவிக்கப்பட்டு கீழே தண்ணீர் செல்லும் பள்ளத்தாக்குகளில் விழும். இப்படி விழுமவைகளால் காட்டாறுகள் குறுக்கே அணைகளிட்டதுபோலத் தடுக்கப்பட்டு பெரிய ஏரிகள், குளங்கள் முதலியவைகளை ஒப்ப நீர்நிலைகளுண்டாய், கொஞ்சகாலத்திற்கெல்லாம் இந்த ஸ்திரமில்லாத அணைகள் உடைப்புண்டு நதிகளில் தண்ணீர் பெருக்கெடுத்து, இரு கரையும் புரண்டோடி அனேகவித நாசங்கள் உண்டாகும்.

பலசமயங்களில் பூகம்பங்கள் நேரிடுங் காலத்தில் பெரிய பிளவுகளுண்டாய், அவைகள் மறுபடி மூடப்படாமல் தண்ணீர்ப் போக்குகளாய் மாறி அகலத்திலும் ஆழத்திலும் அதிகரித்துப் பெரும் பள்ளத்தாக்குகளாகவும், காட்டாறுகளாகவும் ஆகின்றன. பூகம்பங்கள் நேரிடும்போது சிலசமயங்களில் பூமியில் வட்டமான கிடங்குகள் உண்டாவதுண்டு. அனேகமாய் இக்குழிகளிலிருந்து ஏராளமான தண்ணீர் பூமியினுட்புறமிருந்து வெளியே கக்கப்படுகின்றன. பூமியின் அலைகள் ஒழியவே இக்குண்டங்கள் தண்ணீர் நிற்கும் மடுக்களாகக் காணப்படுகின்றன. இவைகள், பூமியின் உட்புறம் இருக்கும் நீர்நிலைகள் நசுக்குண்டு வெளியே மேற்சொல்லிய துவாரங்கள் வழியாய் வருவதாக ஊகிக்கப்படுகின்றன.

பூகம்பங்களினால் பூமியானது, அது முதலில் இருந்த மட்டத்தைக் காட்டிலும் சற்றே உயரமாகவாவது, அல்லது, தணியாகவாவது ஆவதுண்டு. 1822-ம் வருஷம் நவம்பர் மாதம் 19-ம் தேதியில் தென் அமெரிக்காவில் உண்டாகிய ஒரு கொடிய பூகம்பத்தால், *'சில்லி' மாகாணத்தை ஒட்டிய கடற்கரை வெகு தூரமளவும் 3- அடி முதல் 4- அடி வரையில் சமுத்திரமட்டத்திற்குமேல் உயர்த்திவிடப்பட்டது. அதனால் சமுத்திர ஜலத்தின் கீழிருந்த சிறு பாறைகளில் கிளிஞ்சில்கள், பூச்சி சிப்பிகள் முதலியவைகள் ஒட்டிக்கொண்டிருந்தபடியே, அனேகவித செத்தமீன்களுடன் வெளியாக்கப்பட்டன. பிற்பாடு, அவ்விடங்களில் மறுபடியும் உண்டான பூகம்பங்களால், இப்பிரதேசமானது இன்னும் அதிகமாய் உயர்த்தப்பட்டிருக்கிறது.

1811-ம் வருஷ முதல் 1813-ம் வருஷம் வரையில் வட அமெரிக்காவிலுள்ள 'மிஸ்ஸிசிபி' என்னும் ஓர் பேருற்றின் பள்ளத்தாக்கைச் சார்ந்த பிரதேசங்களில் நேர்ந்துவந்த பூகம்பங்களின் இறுதியில், பூமியானது அனேக விடங்களில் பெரும் பிளவுகளாய் பிளக்கப்பட்டதுமல்லாமல், சிலபாகங்கள் தணிவடைந்து ஏறக்குறைய 50-மைல்கள் சுற்றளவுள்ள பெரிய ஏரிகளாய்விட்டன. இப்பிராந்தியங்களில் சிலபாகங்களுக்கு † 'தணிந்த தேசம்' என்று இன்னும் பெயர் வழங்கிவருகிறது. இந்த ஏரிகளுக்குள், முன்னர் மட்டமாயிருந்தபோது இப்பூமிகளில் விருத்தியாயிருந்த மரங்களின் சின்னங்களைப் பார்க்கலாம்.

1762-ம் வருஷத்தில் நமது இந்தியாவைச் சேர்ந்த வங்காள மாகாணங்களில் பூகம்பம் உண்டானபோது ‡ 'சிட்டகாங்கை' அடுத்த கடற்கரையில் சற்றேறக்குறைய 60-சதுர மைல் அளவுள்ள பூமி திடீரென சமுத்திரமட்டத்திற்கு தணிவாய்விட்டது.

* Chili. † The Sunk Country. ‡ Chittagong.

## PROVERBS AS AIDS TO CHILD STUDY.

### பாலபோத சிக்ஷாஸாதனம்.

### பழமொழி விளக்கம்.

(141-வது பக்கத்தொடர்ச்சி.)

(15) அண்ணன் தம்பி வேண்டும் இன்னும் தம்பிரானே.

முன்னொரு பழமொழியில் "பிள்ளை பெற்று கெட்டவனும் இல்லை" என்று சொல்லியிருக்கிறோம். அதே அருத்தத்தை ஒரு சகோதரன் எடுத்துச் சொல்லும் பழமொழி இது. அண்ணனும் தம்பியும் அதிகமாய்வேண்டும் ஸ்வாமி என்று ஈஸ்வரனை ஒரு சகோதரன் பிரார்த்திப்பதாக இந்தப் பழமொழி அருத்தத்தைக் கொடுக்கிறது. தம்பிதான் தனக்குப் பிறகு பிறக்கக்கூடும். அண்ணன்வேண்டும் என்று எப்படி பிரார்த்திக்கலாம். வேண்டிடமட்டும் அண்ணன்கள் தனக்கு முந்தியே பிறந்திருக்கவேண்டும். தனக்குப் பிறகு, தனக்கு அண்ணன் பிறக்கவேண்டும் என்பதாக ஒருவன் எப்படி பிரார்த்திக்கக்கூடும் என்பதாக நமது நண்பர்கள் சந்தேகிக்கலாம். ஆனால் அண்ணன்வேண்டும் என்று இந்தப் பழமொழியில் எடுத்தது அண்ணன் இன்னும் சிறப்புற்று சௌக்கியமாக வாழ்ந்திருக்கவேண்டும். அப்பொழுதுதான் தம்பிக்கும் சௌக்கியம் என்றபடி.

(16) ஒரு புத்திரன் ஆனாலும் குரு புத்திரன் வேண்டும்.

(17) ஒன்றைப் பெற்றாலும் கன்றைப்பெற.

(18) ஒன்றைப் பெற்றாலும் நன்றைப்பெற வேண்டும்.

இம்மூன்று பழமொழிகளின் அருத்தமும் ஒன்றே. ஒரு குழந்தையைப் பெற்றபோதிலும் நல்ல குழந்தையைப் பெறவேண்டும் என்பதாயிற்று.